12 T I,II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2018 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2018 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2018

ශෛවනෙරි I, II
சைவநெறி I, II
Saivaneri I, II

03. 12. 2018 / 0830 - 1140

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

අමතර කියවීම් කාලය - මිනිත්තු 10 යි
மேலதிக வாசிப்பு நேரம் - 10 நிமிடங்கள்
Additional Reading Time - 10 minutes

வினாப்பத்திரத்தை வாசித்து, வினாக்களைத் தெரிவுசெய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.

## சைவநெறி I

**கவனிக்க :**
(i) **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.
(ii) **1** தொடக்கம் **40** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் (1), (2), (3), (4) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிவுசெய்க.
(iii) **உமக்கு வழங்கப்பட்டுள்ள விடைத்தாளில் ஒவ்வொரு வினாவுக்கும் உரிய வட்டங்களில் உமது விடையின் இலக்கத்தை ஒத்த வட்டத்தினுள்ளே புள்ளடியை (×) இடுக.**
(iv) அவ்விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள மற்றைய அறிவுறுத்தல்களையும் கவனமாக வாசித்து, அவற்றைப் பின்பற்றுக.

**1.** இறைவனின் ஐந்தொழில் தத்துவத்தை விளக்கும் வடிவம்
(1) சோமஸ்கந்தர் (2) தட்சணாமூர்த்தி
(3) அர்த்தநாரீஸ்வரர் (4) நடராஜர்

**2.** விநாயகர் அங்கியுடன் சிவலிங்கம் காட்சி தரும் ஆலயம்
(1) பறாளை விநாயகர் ஆலயம் (2) மாமாங்கப் பிள்ளையார் ஆலயம்
(3) வெருகல் சித்திர வேலாயுதர் ஆலயம் (4) திருக்கேதீச்சரம்

**3.** வருடந்தோறும் திருவண்ணாமலையில் நடைபெறும் பெருஞ் சமூக விழாவுடன் தொடர்புடைய விரதம்
(1) ஏகாதசி (2) விநாயகர் சஷ்டி
(3) திருக்கார்த்திகை (4) நவராத்திரி

**4.** ஐப்பசி மாத தேய்பிறைச் சதுர்த்தசியில் கொண்டாடப்படும் பண்டிகையுடன் தொடர்புடைய அசுரன்
(1) நரகாசுரன் (2) மகிஷாசுரன்
(3) தாரகாசுரன் (4) கஜமுகாசுரன்

**5.** பஞ்சாங்கத்தில் குறிப்பிடப்படும் நட்சத்திரங்களின் எண்ணிக்கை யாது?
(1) ஏழு (2) பதினைந்து (3) இருபத்தேழு (4) அறுபது

**6.** திருமணக் கிரியைகளில் 'இரட்ஷாபந்தனம்' எனப்படுவது,
(1) கன்னிகாதானம் ஆகும். (2) காப்புக்கட்டுதல் ஆகும்.
(3) மோதிரம் எடுத்தல் ஆகும். (4) பிதிர் ஆசீர்வாதம் ஆகும்.

**7.** கோயில்களிலுள்ள கொடிமரத்தின் திரைச்சீலை எதனைக் குறிக்கின்றது?
(1) பதி (2) பசு (3) ஆணவம் (4) கன்மம்

[பக். 2 ஐப் பார்க்க

8. திரௌபதை அம்மன் வழிபாட்டுடன் தொடர்புடைய இதிகாசக் கதை
(1) மகாபாரதம் (2) இராமாயணம் (3) சிலப்பதிகாரம் (4) கந்தபுராணம்

9. நாயன்மார்களில் அன்னதானம் வழங்கி முத்தியடைந்தவர்
(1) காரைக்கால் அம்மையார் (2) இயற்பகை நாயனார்
(3) மெய்ப்பொருள் நாயனார் (4) இளையான்குடிமாற நாயனார்

10. சுந்தரருடன் நட்பு பூண்ட திருவஞ்சைக்களத்து மன்னன்
(1) நரசிங்க முனையார் (2) சேரமான் பெருமாள்
(3) சடையனார் (4) சேக்கிழார்

11. தேர்கள் எவ்வாறு வடிவமைக்கப்பட வேண்டும் என்பது பற்றி விபரிக்கும் நூல்
(1) மானசாரம் (2) பகவத்கீதை (3) மகாபாரதம் (4) சிலப்பதிகாரம்

12. 'சகலாகம பண்டிதர்' எனச் சிறப்பித்து அழைக்கப்படுபவர்
(1) மறைஞான சம்பந்தர் (2) உமாபதி சிவாச்சாரியார்
(3) மெய்கண்டதேவர் (4) அருணந்தி சிவாச்சாரியார்

13. "ஏழைப் பிள்ளைகள் பள்ளிக்குச் செல்ல முடியவில்லையென்றால் பள்ளி அவர்களிடம் செல்ல வேண்டும்" எனக் குறிப்பிட்டவர்
(1) சுவாமி விபுலானந்தர் (2) சுவாமி விவேகானந்தர்
(3) ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர் (4) சுவாமி ஞானப்பிரகாசர்

14. 'கோட்டுப் பூ' என அழைக்கப்படும் மலர்கள் எங்கிருந்து பெறப்படும்?
(1) மரங்களிலிலிருந்து பெறப்படும். (2) செடிகளிலிருந்து பெறப்படும்.
(3) நிலக் கொடிகளிலிருந்து பெறப்படும். (4) நீர்க் கொடிகளிலிருந்து பெறப்படும்.

15. சூரியனை இயங்கச் செய்யும் தேவனாகக் கருதப்படுபவர்
(1) வருணன் (2) அக்கினி (3) பிருதுவி (4) சவிதா

16. சுந்தரர் வலக்கண் பார்வை பெற்றபோது பாடிய பதிகம்
(1) பிழையுளன பொறுத்திடுவீர்... (2) இடரினும் தளரினும்...
(3) சொற்றுணை வேதியன்... (4) மீளா அடிமை உமக்கே...

17. இறந்தவர்களின் ஆன்மாவைப் பிதிர்களுடன் இணைப்பதற்காகச் செய்யப்படும் கிரியை
(1) ஏகோதிட்டம் (2) அஸ்தி சஞ்சயனம்
(3) சபிண்டீகரணம் (4) மகாளயம்

18. 'கண்ணுச்சாமி' எனும் தமிழ் சைவப் பெயரைக் கொண்ட, கண்டி இராச்சியத்தின் இறுதி மன்னன்
(1) சேனாசம்மத விக்கிரமபாகு (2) ஸ்ரீ விக்கிரம ராஜசிங்கன்
(3) ஸ்ரீ விஜய ராஜசிங்கன் (4) முதலாம் விமலதர்மசூரியன்

19. சங்கம வழிபாடு மூலம் வீடுபேறு பெற்றவர்
(1) சிறுத்தொண்டர் (2) திருமூலர் (3) கண்ணப்பர் (4) குலச்சிறையார்

20. இலங்கையை ஆட்சிபுரிந்தவனும் சைவ சமயத்துக்குப் பெரும் பங்காற்றியவனுமான சைவ மன்னன்
(1) மகாசேனன் (2) இராவணன் (3) பராக்கிரமபாகு (4) மாமல்லன்

21. நாட்டார் தெய்வங்களுள் ஒன்றாகிய வைரவப் பெருமானுக்குரிய விரத நாட்கள்
(1) பங்குனி உத்தரம், ஆனி உத்தரம் (2) வைகாசி விசாகம், ஆடிப்பூரம்
(3) சித்திரைப்பரணி, ஆடிப்பரணி (4) ஆவணி ஞாயிறு, பங்குனித் திங்கள்

22. 'சித்திரபுத்திரனார்' எனும் நூலில் குறிப்பிடப்பட்டுள்ளதன்படி பூலோகத்தில் செய்யப்படும் பாவத்தையும் அதற்குரிய தண்டனையையும் சரியாகக் கொண்ட சோடி எது?
(1) பெற்றோரை வருத்துதல் - ஆணிப்பலகையில் படுக்க வைத்து வாளால் அரிதல்
(2) மது அருந்துதல், புகைத்தலில் ஈடுபடுதல் - கழுமரத்தில் ஏற்றிக் கொல்லுதல்
(3) பிறர் சொத்தைக் களவாடுதல் - தீக்கிடங்கில் தள்ளிவிடுதல்
(4) உயிரினங்களை வதைத்தல் - கொடிய நச்சுப் பாம்புகளைக் கொண்டு தீண்டச் செய்தல்

[பக். 3 ஐப் பார்க்க

**23.** "ஏகம் சத் விப்ரா வகுதா வதந்தி" என்ற கூற்றின் ஊடாக உணர்த்தப்படும் மூலப் பொருள் யாது?
(1) இறைதேவர்கள் பலர் உள்ளனர்.
(2) இறைவன் ஒருவனேயாவான்.
(3) இறைவனை தினந்தோறும் வழிபடுதல் வேண்டும்.
(4) கோயில்களில் இறைவன் சிறப்பாக எழுந்தருளியுள்ளார்.

**24.** கச்சியப்பருக்கு, கந்தபுராணத்தைப் பாடுவதற்காக முருகப் பெருமானால் எடுத்துக் கொடுக்கப்பட்ட பாடல் அடி
(1) உலகெலாமுணர்ந்து... (2) பித்தா பிறைசூடி...
(3) முத்தைத்தரு... (4) திகடசக்கர...

**25.** ஆகமங்களில் விபரிக்கப்பட்டுள்ள விடயங்களை மாத்திரம் கொண்ட தொகுதி
(1) ஆலயம் அமைப்பதற்கான இடம், அமைப்பு முறைகள், கோயிற்கிரியைகள்
(2) படிம இலக்கணம், கப்புகனார் ஒழுக்க முறைகள், கோயிற்கிரியைகள்
(3) கப்புகனார் ஒழுக்க முறைகள், படிமங்களை வார்க்கும் முறைகள், ஆலய அமைப்பு முறைகள்
(4) அர்ச்சகர் ஒழுக்கங்கள், உருத்திரன், இந்திரன் வருணனை முறைகள், ஆன்மாக்கள் அடையும் பேறு

**26.** யசுர் வேதத்தில் இடம்பெறும் 'ஸ்ரீருத்ரம்' எனப்படும் பகுதியில் சிறப்பித்துக்கூறப்படும் கடவுள்
(1) விஷ்ணு (2) முருகன் (3) விநாயகர் (4) சிவபெருமான்

**27.** 'தேவார முதலிகள்' எனச் சிறப்பிக்கப்படுவோர் யாவர்?
(1) சம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர் (2) சம்பந்தர், அப்பர், சுந்தரர்
(3) சம்பந்தர், மாணிக்கவாசகர், சேக்கிழார் (4) சம்பந்தர், அப்பர், சேக்கிழார்

**28.** தனது அபூர்வ நீதிச்செயல்கள் காரணமாக சிவபெருமானின் இடபாரூட வடிவத்தைக் கண்டு களித்தவனாக பெரியபுராணத்திற் சிறப்பித்துக் கூறப்படும் மன்னன்
(1) இராஜராஜ சோழன் (2) இராஜேந்திர சோழன்
(3) மனுநீதிகண்ட சோழன் (4) விஜயாலய சோழன்

**29.** கொக்கட்டிச்சோலை தான்தோன்றீச்சரத்தில் குடுக்கைகூறும் கல்வெட்டு வாசிக்கப்படுவதன் நோக்கம்
(1) திருவிழாவில் பங்கேற்ற அனைவரையும் கௌரவித்தல்
(2) திருவிழாவின் உபயகாரர்களுக்கு மதிப்பளித்தல்
(3) கோயில் வண்ணக்கர்களுக்குத் தானம் வழங்குதல்
(4) 'சங்கமர்' எனப்படும் வீரசைவ குருமார்களுக்குப் பட்டம் சூட்டுதல்

**30.** ஆலயத்தைச் சூழ ஏழு வீதிகள் அமைக்கப்பட்டு, 'சதுரங்க ஷேத்திரம்' என அழைக்கப்பட்ட இலங்கையில் பிரசித்தி பெற்ற விஷ்ணு ஆலயம்
(1) வல்லிபுர ஆழ்வார் ஆலயம் (2) வண்ணார்பண்ணை பெருமாள் கோயில்
(3) பொன்னாலை வரதராஜப் பெருமாள் ஆலயம் (4) தெவிநுவர விஷ்ணு கோயில்

**31.** பகவத்கீதையில் கூறப்படும் கருத்துக்களைத் தன்னகத்தே கொண்ட பௌத்த நூல்
(1) திரிபிடகம் (2) மகாவம்சம் (3) சூளவம்சம் (4) தம்மபதம்

**32.** காசியில் மடமொன்றை நிறுவுவதற்கு அப்பிரதேச ஆளுனருடன் ஹிந்துஸ்தானி மொழியில் பேசமுடியாத நிலை ஏற்பட்டபோது பன்மொழி ஆற்றல் வேண்டிப் பாடப்பெற்ற பிற்காலத் தோத்திரப் பாடல்
(1) சகலகலாவல்லிமாலை (2) அபிராமி அந்தாதி
(3) திருப்புகழ் (4) பராபரக்கண்ணி

**33.** சைவ இல்லங்களில் மாலைவேளைகளில் விளக்கேற்றும் போது பாடப்படுகின்ற "இல்லக விளக்கது இருள் கெடுப்பது..." என்ற திருமுறைப் பாடலைப் பாடியவர்
(1) சம்பந்தர் (2) அப்பர் (3) சுந்தரர் (4) மாணிக்கவாசகர்

**34.** ஆலய கும்பாபிஷேகக் கிரியைகளில் விக்கிரகத்தின் அழுக்கை நீக்கிச் சுத்தம் செய்தல் எவ்வாறு அழைக்கப்படும்?
(1) ஸர்ப்பஸா ஹிதி (2) அஷ்டபந்தனம்
(3) பிம்பசுத்தி (4) வாஸ்துசாந்தி

[பக். 4 ஐப் பார்க்க

55670

**35.** திருப்பனந்தாளில் சாய்ந்திருந்த சிவலிங்கத்தை, தனது கழுத்தில் வலிமையான கயிற்றைக் கட்டியிழுத்து நிமிர்த்தி அற்புதம் செய்தவர்

(1) கண்ணப்ப நாயனார் (2) குங்குலியக்கலைய நாயனார்
(3) அப்பூதியடிகள் (4) நமிநந்தியடிகள்

**36.** குற்றமில்லாத பசுவின் சாணத்தை முறைப்படி அக்கினியால் சுட்டு, அதில் வெண்ணீறான பகுதியை எடுத்து மலர்கள் இட்டு பத்திரப்படுத்தப்படும் விபூதி வகை எவ்வாறு அழைக்கப்படும்?

(1) கற்பம் (2) அனுகற்பம்
(3) உபகற்பம் (4) அகற்பம்

**37.** கந்தசஷ்டி விரதத்தை அனுட்டிப்பதற்கான நியதியைக் குறித்து நிற்கும் கூற்று யாது?

(1) மஞ்சள் தோய்ந்த ஒன்பது நூலிழைகளை முறுக்கியெடுத்து முடிந்தெடுத்த ஒன்பது முடிச்சுக்காப்பை கும்பத்தில் வைத்து பூசை செய்தல்
(2) விரத தொடக்க நாளில் இருபத்தொரு இழைகள் கொண்ட காப்பை ஆண்கள் வலக் கையிலும் பெண்கள் இடக் கையிலும் அணிந்துகொள்ளல்
(3) கார்த்திகை நட்சத்திரத்தின் மறுநாளான ரோகிணி நட்சத்திர தினத்தில் பாரணை செய்து விரதத்தைப் பூர்த்தி செய்தல்
(4) ஆறு தினங்கள் உபவாசம் இருந்து ஏழாம் நாள் பாரணை முடித்து விரதத்தை நிறைவு செய்தல்

● பின்வரும் அட்டவணையில் **A** இலிருந்து **I** வரையில் தரப்பட்டுள்ள தகவல்களை அடிப்படையாகக் கொண்டு **38** தொடக்கம் **40** வரையான ஒவ்வொரு வினாவுக்குமான விடையைத் தெரிவுசெய்க.

| சைவம் வளர்த்த சான்றோர் | வாழ்வியற் சம்பவம் | நூல் |
|---|---|---|
| A - ஆறுமுகநாவலர் | D - 'பிரபோத சைதன்யர்' என்ற பிரமச்சாரிய நாமம் வழங்கப்பட்டமை | G - திருமந்திரம் |
| B - விபுலானந்தர் | E - 3000 ஆண்டுகள் வாழ்ந்தமை | H - பாலபாடம் |
| C - திருமூலர் | F - கடும் வரட்சியின்போது கஞ்சித்தொட்டி அமைத்து தர்மம் செய்தமை | I - யாழ்நூல் |

**38.** 'முத்தமிழ் வித்தகர்' எனப் போற்றப்படுபவரோடு தொடர்புடைய தொகுதி

(1) AFH (2) BDI (3) BEI (4) CEG

**39.** "அன்பே சிவம்" எனக் குறிப்பிட்டவரோடு தொடர்புடைய தொகுதி

(1) ADG (2) AFH (3) CEG (4) CDI

**40.** 'வித்தியானுபாலன யந்திரசாலை' எனும் அச்சகத்தை நிறுவியவரோடு தொடர்புடைய தொகுதி

(1) AEH (2) AFH (3) BDI (4) CFH

* *

[பக். 5 ஐப் பார்க்க

12 T I, II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2018 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2018 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2018

ශෛවනෙරි I, II
சைவநெறி I, II
Saivaneri I, II

## சைவநெறி II

* **முதலாம்** வினாவும் **இரண்டாம்** வினாவும் உட்பட **ஐந்து** வினாக்களுக்கு மாத்திரம் விடை எழுதுக.
* முதலாம் வினாவின் விடைக்கு **20** புள்ளிகளும் இரண்டாம் வினா உட்பட ஏனைய ஒவ்வொரு வினாவின் விடைக்கும் **10** புள்ளிகள் வீதமும் வழங்கப்படும்.

**1.** மேல்வரும் வினாக்களுக்குச் சுருக்கமான விடை எழுதுக.

(i) 'பிள்ளையார் கதை' என்னும் விரத நூலினை இயற்றியவர் யார்?

(ii) ஆவணி மாதப் பூரணைக்கு முந்திய வெள்ளிக்கிழமையில் அனுட்டிக்கப்படும் விரதம் எது?

(iii) 'தடுத்தாட்கொண்ட புராணம்' அமைந்துள்ள நூல் எது?

(iv) சிவாகமங்களை அருளிச் செய்தவர் யார்?

(v) கங்காதர புட்கரணியைத் தீர்த்தமாகக் கொண்டு அமைந்துள்ள திருத்தலம் எது?

(vi) 'தேர்த்திருவிழா' உணர்த்தும் இறைவனது தொழில் எது?

(vii) உமாபதி சிவாச்சாரியார் செய்த அற்புதங்கள் **இரண்டினை** எழுதுக.

(viii) சைவசமயிகள் கொண்டாடும் பண்டிகைகள் **இரண்டினைக்** குறிப்பிடுக.

(ix) சைவசமயி ஒருவர் பெறவேண்டிய தீட்சைகளுள் **இரண்டினைத்** தருக.

(x) பஞ்சபுராணம் ஓதும்போது கடைப்பிடிக்க வேண்டிய ஒழுங்குமுறைகள் **நான்கினைக்** குறிப்பிடுக.

**2.** (i) மேல்வரும் பாடல்களுள் **இரண்டினை** அடிமுறை பிழையாது திருத்தமாக எழுதுக.

(ii) அவற்றின் பொழிப்புரையை எழுதுக.

(அ) "மீளா அடிமை உமக்கே ஆளாய்..."

(ஆ) "கற்றவர் விழுங்கும்..."

(இ) "பாலுக்குப் பாலகன் வேண்டியழுதிட..."

(ஈ) "மூவிரு முகங்கள் போற்றி..."

(உ) "பச்சைமாமலை போல்மேனி..."

**3.** "சைவ சமய நூல்கள் உயர்ந்த விழுமியங்களை வலியுறுத்துகின்றன."

(i) 'வாய்மையே வெல்லும்' என்ற இலட்சிய வாழ்விற்கு முன்னுதாரணமாக விளங்கிய **இருவரைக்** குறிப்பிடுக.

(ii) ஈகையை வெளிப்படுத்தக்கூடிய செயல்கள் **மூன்றினைத்** தருக.

(iii) 'அன்பு நெறியே சைவநெறி' என்பது பற்றிச் சுருக்கமாக விபரிக்குக.

[பக். 6 ஐப் பார்க்க

4. "பன்னிரு திருமுறைகள் தொகுக்கப்பட்ட பின்னர் பாடப்பட்டவை பிற்காலத் தோத்திரப் பாடல்களாகும்."
   (i) பிற்காலத் தோத்திரப்பாடல்கள் **இரண்டினைக்** குறிப்பிடுக.
   (ii) நாலாயிரத் திவ்விய பிரபந்தம் பற்றிய **மூன்று** குறிப்புகள் எழுதுக.
   (iii) அபிராமி அந்தாதி பாடப்பட்ட சந்தர்ப்பம் பற்றிச் சுருக்கமாக விளக்குக.

5. பதி, பசு, பாசம் ஆகியன முப்பொருள்களாகும்.

   \- சைவ சித்தாந்தம் -

   (i) சைவ சித்தாந்தம் குறிப்பிடும் பதியின் **இரண்டு** நிலைகளையும் தருக.
   (ii) பசுவின் இயல்புகள் **மூன்றினைக்** குறிப்பிடுக.
   (iii) மும்மலங்களுள் ஆணவம் பற்றிச் சுருக்கமாக விளக்குக.

6. "சைவ மரபுகளைப் பேணுவதில் சைவாலயங்களின் பங்கும் பணியும் மகத்தானவை."
   (i) இலங்கையில் தேவாரப் பாடல்பெற்ற **இரண்டு** சிவாலயங்களையும் குறிப்பிடுக.
   (ii) மட்டக்களப்பு புன்னைச்சோலை ஸ்ரீ பத்திரகாளியம்மன் ஆலயத்தில் இடம்பெறும் தீ மிதிப்புச் சடங்கின் சிறப்பம்சங்கள் யாவை?
   (iii) நல்லூர் கந்தசுவாமி ஆலய வரலாற்றினைச் சுருக்கமாக விளக்குக.

7. மேல்வருவனவற்றுள் எவையேனும் **இரண்டிற்குச்** சிறுகுறிப்பு எழுதுக.
   (i) வீட்டில் சைவம்
   (ii) வசந்தன் கூத்து
   (iii) கோயில் வழிபாட்டின் அவசியம்
   (iv) சிவசின்னங்கள்

* * *